9th September 1960]

SRI T. S. RAMASWAMI : ரயில் பாதையே இல்லாத கன்னியாகுமரி ஜில்லாவில் ரயில் பாதை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன், திருநெல்வேலி முதல் கன்னியாகுமரி வரை ரயில் பாதை போட வேண்டும் என்று தீர்மானித்து அதற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முதலிடம் கொடுத்திருந்ததாகவும், பின்னால் அது ஆருவது இடத்திற்கு வந்து விட்டதாகவும் சொல்லப்படுகிறதே, அது உண்மையா ? அப்படியானால் அதற்குக் காரணம் என்ன ? அவ்விதம் ஆருவது இடத்தில் போட்டிருந்தால் அதை மாற்றி முதலிடத்தில் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புதிய ரயில்வே லைன்கள் போடுவதைப் பற்றி ரயில்வே உதவி மந்திரியுடன் பேசிக் கொண்டிருந்ததைப்பற்றி சற்று முன்பு சொன்னேன். அதில் முதலிடம் சேலம்-பங்களூர் பாதைக்கும், இரண்டாவது இடம் மாஞமதுரை-அருப்புக் கோட்டை பாதைக்கும் வற்புறுத்தப்பட்டிருக்கிறது என்று சொன்னேன். அதற்கு மேலாக மூன்ருவது இடத்தைப்பற்றி தகராறு இருக்கவேண்டாம் என்று நினைத்துச் சொல்லவில்லை. மூன்ருவது இடமாக திருநெல்வேலி-கன்னியாகுமரி பாதையை வற்புறுத்துவது என்பது தான் என்னுடைய உத்தேசம்.

*Satyagraha (Socialists)*

* 553 *Q.*—SRI P. S. CHINNADURAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விலைவாசிகளைக் கட்டுப்படுத்தக் கோரியும், மற்றும் பல கோரிக்கைகளுக்காகவும் தமிழ் நாட்டின் சோஷலிஸ்டுகள் சர்க்கார் காரியாலயங்களின் முன்பாக சத்தியாக்கிரகம் நடத்தினர்களா ?

(ஆ) அவ்வாறு சத்தியாக்கிரகம் நடத்தியவர்களை சர்க்கார் கைது செய்தார்களா ?

(இ) அப்படியானல், அவர்களின் எண்ணிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) 367.

SRI P. S. CHINNADURAI : இந்த சத்தியாக்கிரகத்தின்போது கைது செய்யப்பட்ட சோஷியலிஸ்டுகள் சிறையில் எந்த முறையில் நடத்தப்பட்டார்கள், அவர்கள் அரசியல் கைதிகள் என்ற முறையில் நடத்தப்பட்டார்களா அல்லது மற்ற சாதாரண கிரிமினல் கைதிகளைப்போல் நடத்தப்பட்டார்களா என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

*Railways (electrification)*

* 555 *Q.*—SRI T. SAMPATH : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the stage at which the scheme of electrification of railway line between Tambaram and Villupuram stands;

(*b*) whether the scheme would be implemented before the end of the Second Five-Year Plan; and

(*c*) what power would be used, whether A.C. or D.C.?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*c*) Our information is that the scheme of electrification of railway line between Tambaram and Villupuram has already been started